gistered No. M. 2330

'SIDDHANTHAM'
Vol. 30—No. 10

# சித்தாந்தம்

சைவசித்தாந்த மகாசமாஜத் திங்கள் வெளியீடு

'தன்க டன்னடி யேனையுந் தாங்குதல்
என்க டன்பணி செய்து கிடப்பதே'



லர் 30 | ஹேவிளம்பி ஐப்பசி 1957 அக்டோபர் | இதழ் 10

உள்ளுறை



பத்திராசிரியர் : C. M. இராமச்சந்திரன் செட்டியார், பி.ஏ., பி.எல்.
உதவிப் பத்திராசிரியர் : புலவர் - முருகவேள், எம்.ஓ.எல்.

சைவ சித்தாந்த மகா சமாஜம்
14, வாரன் ரோடு, மயிலாப்பூர், சென்னை-4

ஆண்டுச் சந்தா ரூபா 3 தனிப்பிரதி அணு 4

## சமாஜ அறிக்கை

சைவ சித்தாந்த மகா சமாஜத்தின் 52-ம் ஆண்டு நிறைவு விழா இவ்வருடக் கடைசியில் கூட்டவேண்டும். ஆர்வமுள்ள சில அங்கத்தினர்கள் தங்கள் ஊரிலோ ஜில்லாவிலோ நடத்த விருப்பப்படலாமெனக் கருதி இவ்வறிக்கை விடுத்துள்ளோம். அப்படி அபிப்பிராயம் கொள்ளும் அன்பர்கள் தங்கள் விருப்பத்தைத் தெரிவித்துக் கொள்வதோடு அதற்கான தக்க பொருளுதவி இடவசதிகளையும் அமைத்துத் தந்து உதவுமாறு கேட்டுக் கொள்கிறேன். —காரியதரிசி.

---

## செய்தித்திரட்டு

5–9–57. இரத்தினகிரி தமரக்கடவுள் - விமான் குடமுழுக்கு விழா :—குடமுழுக்கு வெகு தூய்மையான தமிழ்முறையில் நடத்தப் பெற்றது. மாலையில் கோவைகிழார் தலைமையில் சமயச் சொற்பொழிவுகள் நடந்தன. செல்வி-க. சுப்புலட்சுமி, பி.ஓ.எல். "முருகன் பெருமை"யைப் பற்றியும், வித்வான் - இராமசாமி அடிகள் "விழா" வைப் பற்றியும் பேசினார்கள். வித்வான்—சுந்தரம் தாம் இயற்றிய "குமரன்பாமலை அரங்கேற்றமும்" நிகழ்த்தினார்கள்.

8–9–57. திருச்சி தமிழ்ச்சங்கம் :—முதுபெரும்புலவர் அ.மு.ச. முதலியார் தலைமையில் திரு. கி. ஆ. பெ. விசுவநாதம் "திருக்குறள் தேர்வுத் திட்டத்தை" விளக்கினார்கள்.

---

## ஐயவினா

திருமயிலைத் தேவாரமாகிய பூம்பாவைப் பதிகத்தில் திருஞான சம்பந்தமூர்த்தி சுவாமிகள் "அட்டிட்டல் காணாதே போதியோ" "பங்குனி உத்திர நாள் காணாதே போதியோ" என்றெல்லாம் பாடியிருப்பது ஒருவரிறந்துபட்டால் அதனால் ஏற்பட்ட குறைபாடுகளைக் குறித்து அனுதாபப்படுதல் போலிருக்கிறது. எனினும் சேக்கிழார் பெருமான் அதில் ஓர் உண்மையைக் கற்பித்து விளக்குகிறார்கள். அதாவது "மண்ணினிற் பிறந்தார் பெறும்பயன் அண்ணலார் அடியாரவர்க்கமுது செய்வித்தல், மற்று அவர்தம் பொலிவிழாக் கண்டார்தல் உண்மையாமெனில் உலகர்முன் வருக" என்று அப்பதிகம் பாடியருளியதாக அவர்கள் கருதுகிறார்கள். அவ்வற்புத நிகழ்ச்சி அவ்வுண்மையைத்தான் காட்ட நிகழ்ந்ததெனச் சேக்கிழார் பெருமான் எக் கருத்துகொண்டு கூறினார்கள் எனச் சில புறச் சமயத்தார் கேட்கும் கேள்விக்குத் தக்க விடை சித்தாந்தத்தின் மூலம் எழுதும்படியாகச் சைவப் பெருமக்களைக் கேட்டுக் கொள்கிறேன்.

Reg. M. 2330

உ

சிவமயம்

# சித்தாந்தம்

ஆனைமுகன் ஆறுமுகன் அம்பிகைபொன் னம்பலவன்
ஞானகுரு வாணியை உள்நாடு.

மலர் 30 | ஹேவிளம்பி ஐப்பசி 1957 அக்டோபர் | இதழ் 10

## சமயப் பொறை

ஆசிரியர்

இறை, உயிர், தளை என்பவைகள் நிலைத்து நிற்கும் பொருள்கள். இவைகளைப்பற்றி அறிவுள்ள மக்கள் பல கருத்துக்களைக் கொண்டிருக்கிறார்கள். அப் பொருள்கள் ஒன்றுக்கொன்று தொடர்பு உள்ளவைகள். அத் தொடர்பைப் பற்றியும் மக்கள் பல கருத்துக்களைக் கொண்டுள்ளார்கள். அக் கருத்துக்களின் தொகுதிதான் சமயம் என்ற பெயரால் வழங்கப்படுவது.

மக்கள்உடைய எண்ணம் போக்கு பல தரப்பட்வைகளாக இருக்கும். அவரவர்களுடைய அறிவின் ஏற்றத் தாழ்ச்சிக்குத் தக்கபடி மாறுபடும். அம் மாறுபாடு தனிப்பட்டார் வகையிலும் தொகுதியார் வகையிலும் இனத்தார் வகையிலும் வெவ்வேறாக இருக்கும். இவ் வேறுபாடுகள் இயல்பேதான்.

கருத்துக்கள் வேறுபட்டிருக்கும்போது, கருத்துக்களின் தொகுதிகளும் வேறுபட்டு நிற்கும் அல்லவா? முப்பொருள்களைப் பற்றிய கருத்துக்களின் தொகுதி சமயம் என்று மேலே கூறியவகையில் வேறுபடும் மக்களின் நிலைகளுக்குத் தக்கபடி சமயங்களும் பல வேறுபாடுகளில் நிற்கும்.

அச் சமய வேறுபாடுகளில் சில ஒத்தும் சில ஒவ்வாமலும் இருக்கும். ஒவ்வாமல் போகுமாகில் அது பூசல் எனப்படும். இந்தவகையில்தான் சமயப் பூசல் உலகில்

தோன்றுகிறது. ஒத்துப்போகும்பட்சத்தில் பூசல்ஏற்படாது. அதுவே சமயப் பொறை எனப்படும். சமயங்களில் பூசல்களும் பொறைகளும் இருந்திருக்கின்றன. பூசல்களோ கணக்கற்ற கேடுகளை விளைத்திருக்கின்றன. பொறையோ கேடுகளை நீக்கி நன்மையே விளைத்திருக்கின்றது.

பலப்பல நாட்டு வரலாறுகளில் சமயப் பூசல்களே மிகுதி. அவைகள் பயங்கரமாகவும் இருக்கும். ஆனால் சில சமயங்களில் சமயப் பொறைகள் தோன்றி யிருக்கின்றன. அவைகளே மனிதனுடைய மேன்மைக் குணாதிசயங்களை எடுத்துக் காட்டுகின்றன.

சில சமயங்களுக்குள் பகைமை இல்லாமல் தோன்றின போதிலும் நாளாவட்டத்தில் பல வேறு காரணங்களினால் பகைமை தோன்றி விடும். அப்போது பூசல்கள் தோன்றி மக்களின் நிம்மதியைக் கெடுத்துவிடும். அப்போது மக்களின் துன்பங்களை எடுத்துக் கூறவே அஞ்சுவோம்.

இந்து வைதிகச் சமயத்திற்கும் பௌத்த சமணங்களுக்கும் முதலில் என்ன பகைமை இருந்தது ? ஆனால் நாளாவட்டத்தில் சமயப் பூசல் எவ்வாறு பெருகிவிட்டது ? அது போலவே கிறிஸ்தவத்திற்கும்—யூதத்திற்கும் என்ன கருத்து வேற்றுமை இருந்தது ? கிறித்துவத்திற்கும் இசுலாம் சமயத்திற்கும் என்ன வேறுபாடு இருந்தது ? ஆனால் வரலாற்றில் எப்படிப்பட்ட பூசல் தோன்றின. எழுதினால் மனம் நொந்து சீரழியும் அல்லவா ?

உலக வரலாறுகளைக் கூறும்போது மிகவும் உணர்ச்சி ததும்பிய செய்திகள் நடுக்கால வரலாறுகளே ஆகும். அப்போது மக்கள் கல்வியில் தாழ்ந்திருந்தார்கள். எந்தச் சிறு செய்திக்கும் உணர்ச்சி பொங்கக் குதித்து எழும்புவர்கள். மண், பெண், பொன் என்ற மூன்று கவர்ச்சிகளுக்குமே அன்றிச் சமயம் என்ற நிலையிலும் மிகுந்த உணர்ச்சி கொண்டிருந்தார்கள். வெகு சிறிய காரணத்திற்கும் கொடிய போராட்டங்களும் தண்டனைகளும் இடுவார்கள். இந்த முறையிலே பூசல்களும் கொலைகளும் நடந்தன.

மேல் நாடுகளிலே வெவ்வேறு சமயங்களுக்கு இடையிலே ஏற்பட்ட பூசல்களேயன்றிக் கிறிஸ்தவத்திலேயே உட் கோட்பாடுகளில் பிளவுகள் ஏற்பட்டுக் கணக்கற்ற கொடுமைகள் தோன்றின. இந்து நாட்டிலோ முதலில்

சமண பௌத்த சமயங்களுக்கும் வைதீகச் சமயங்களுக்கும் ஏற்பட்ட பூசல்கள் ஒருபுறம் ஓங்கியிருக்க, வைதீகர்களிலேயே சைவத்திற்கும் வைணவத்திற்கும் பூசல்கள் தோன்றின. இவைகள் எல்லாம் கல்வியும் பண்பாடும் குறைந்திருந்த காலங்களில் நிகழ்ந்தன எனலாம். படிப்பு முதிர்ச்சி அடைந்தபின்னர் வெறும் கோட்பாடுகளுக்கு என்று பூசல்கள் உண்டாவதில்லை. அது பொருந்தியமட்டும் நாம் நல்ல காலத்தில் இருக்கின்றோம் என்று கூறலாம்.

சமயப் பூசல்களைப்பற்றிச் சரித்திர வரலாறுகளைப் படிக்கும் மாணவர்கள் 'என்ன கொடுமை' என்று அக் காலத்தைப்பற்றிப் பரிதாப்படுவார்கள். இப்படியும் நிகழ்ந்திருக்குமோ என்றும் ஐயப்படுவார்கள். வெறுங் கொள்கைகளுக்காக ஆயிரக்கணக்கில் மக்கள் கழுவில் உயிர் துறப்பார்களா என்றும் கேட்பார்கள். நம்பிக்கை இல்லை என்ற காரணத்தை முன்னிட்டு அருமையான சிற்பங்களையும் கட்டிடங்களையும் அழிப்பார்களா என்றும் கேட்கலாம். இவைகள் ஒரு பகுதியாவது உண்மையாக இருக்கும் என்று விஜயநகர சாம்ராச்சியத்தின் பாழ் நகரங்களையும் இடிந்த கோயில்களையும் கண்டு ஊகிக்கலாம். ஆனால் இவ்வாறுகப் பூசல்களே நிறைந்திருந்தனவா ? சமயப் பொறை என்ற நற்குணம் அக் காலங்களில் இருக்கவில்லையா ? என்று மற்றொரு கேள்வி கேட்கலாம்.

ஒவ்வொரு நூற்றாண்டிலும் சமயப் பொறை காட்டக் கூடிய பலவேறு வரலாற்றுப் பகுதிகள் ஏற்பட்டிருக்கின்றன. அவைகளை வரலாற்று மாணவர்களும் பொது மக்களும் எளிதாக அறிவதில்லை. அவ்வாறான நிகழ்ச்சிகளை வரலாற்று நூல்களோ சமய நூல்களோ மிகவாகப் போற்றுவதில்லை. அவைகளில் ஒன்றிரண்டு எடுத்துக் காட்டுவதே இக் கட்டுரையின் நோக்கம் ஆகும்.

முதலில் சமணத்திற்கும் சைவத்திற்கும் முன்னாளில் ஏற்பட்ட பூசல் மறைந்து போய்ச் சமரசக் கொள்கையாகிய சமயப் பொறை நிகழ்ந்த செய்தி கூறுவோம். கோவை வட்டத்தில் தென்கோடியில் ஆனைமலைத் தொடர்ச்சியில் திருமூர்த்தி மலை என்ற ஒரு புனிதத்தலம் இருக்கிறது. அங்கே மலைகளிலிருந்து நீர்வீழ்ச்சி தோன்றி அடிவாரத்தில் பாய்ந்து அழகிய அருவியாக ஓடுகிறது. அங்கே ஒருபெரும்

பாறையில் ஒரு சமணதீர்த்தங்கரரின் திருஉருவம் இருக்கிறது. அதில் இடையில் தீர்த்தங்கரர் இருபுறங்களில் இரண்டு சாமரேந்திரர்கள் கவரிவீச வீற்றிருக்கின்றனர். இது அருகக் கடவுளின் சின்னமாகும். இதனைத் திருமூர்த்தி என்று சூளாமணியும் போற்றியிருக்கின்றது.

இந்தத்தலம் ஒரு சமணர் புனிதத்தலம் என்பதற்கு அத்திருவுருவம் மட்டுமேயன்றி அப் பாறைக்கு அடியில் சமநிலப் பாங்கில் பொறிக்கப்பட் டிருக்கும் ஒரு கல் வெட்டே சான்றாக இருக்கிறது. இக் கல்வெட்டில் அந்த இடத்தை அமண சமுத்திரம் என்றும் அந்த மூர்த்தியை அமணேசுவரர் என்றும் கூறப்பட்டுள்ளது. ஆகவே இந்தத் தலம் ஒரு சமண புனிதத்தலம் என்பதற்கு ஒரு சிறிதும் ஐயமில்லை.

என்றாலும், இதனைத் தற்காலப் பொதுமக்கள் என்ன என்று வழங்குகிறார்கள்? பாறையில் உள்ள மூர்த்தியைத் திரிமூர்த்தி என்றும், கோயிலைத் திரிமூர்த்திக்கோயில் என்றுமே வழங்கி வழிபடுகிறார்கள். அரி அரன் அயன் என்ற மும்மூர்த்திகளின் திரி உருவமாக அதனை மாற்றி அண்மையில் அதற்கு ஒரு புராணமும் இயற்றி வைத்திருக்கிறார்கள். எத்தனை எளிதில் சமண சமய உருவம் இந்து சமய உருவம் ஆக மாறிவிட்டது பாருங்கள். இது சமயப் பொறையின் வேலை அல்லவா?

மேலும், அந்தத் தலத்தின் குறுநில மன்னனாக இருந்த எத்துவப்ப நாயக்கன் என்ற இந்து சமயத் தலைவன் அக் கோயிலுக்கு 1793ம் ஆண்டில் ஒரு ஒப்பந்தம் செய்து கல் வெட்டில் பொறித்திருக்கிறான் (186/27) அதின்படி தன் குடும்பத்தில் நடக்கும் ஒவ்வொரு திருமணத்தின் போதும் அக் கோயிலுக்குக் காணிக்கை தருவதாக ஒப்புக்கொண் டிருக்கிறான். ஆகவே வெகு எளிதில் சமணத் திருவுருவத்தை இந்து உருவமாக்கிவிட்ட வரலாறு இதனால் தெரிகிறது. இது அவர்களுடைய சமயப் பொறையைக் காட்டுகிறது.

மேலும், கோவை வட்டத்தில் பூந்துறை நாட்டில் பண்டைக் காலத்தில் பல சமணக் கோயில்கள் கட்டப் பட்டன. அவைகளை மேல் பார்வை பார்ப்பதற்குப் பல சமண குடும்பங்கள் இருந்தன. அக் குடும்பங்களில் பல கற்றோர்கள் இருந்தார்கள். அவர்களில் சிறந்த புலமை

வாய்ந்தவர்கள் தோன்றி அரிய நூல்களை எழுதியுள்ளார்கள். விஜயமங்கலத்தில் பெருங் கதை எழுதிய கொங்குவேளிரும், சனகாபுரத்தில்(சனகை) நன்னூல் எழுதிய பவணந்தி முனிவரும், களந்தையில் உரையாசிரியர் அடியார்க்கு நல்லாரும் இருந்திருக்கிறார்கள். விஜயமங்கலம், அரசண்ணாமலை, சீருபுரப்:, பூந்துறை, வெள்ளோடு முதலிய ஊர்களில் உள்ள சமணர் கோயில்களை அண்டிக்கொண்டு இந் நாளிலும் சில சமணக் குருக்கள் இருக்கிறார்கள். சுற்றுப் பக்கங்களில் உள்ள இந்து சமயத்தவர்கள் பேதம் பாராட்டாது இக் கோயில்களுக்கு வழிபாடு இயற்ற இப்போதும் செல்லுகிறார்கள். இது சமயப் பொறை அல்லவா ?

இனி, கொங்குச் சோழர்கள் ஆண்ட காலங்களில் அதாவது 6, 7-ம் நூற்றாண்டுகளின் முன் இக் கோயில்களுக்குப் பல நிலங்கள் தானம் செய்யப்பட்டன. அத்தானங்கள் பெரும்பாலும் இந்த அரசர்களும் வியாபாரிகளும் வேளாளர்களுமே செய்திருக்கிறார்கள். சமயப் பொறை இன்றியா இவைகள் செய்யப்பட்டன ?

இனி சைவ வைணவ சமயங்களிலும் பூசல்களுக்குப் பதிலாகச் சமயப் பொறை இருக்கக் காண்கிறோம். ஒவ்வொரு சிவாலயத்திலும் திருமாலுக்கு ஒரு கருவறை இருப்பதைக் காணலாம். திருமாலின் லீலைகள் அடங்கிய சிற்பங்கள் இருக்கக் காணலாம். பொதுவாகவே சைவ மக்கள் வைணவப் பெயர்களை இட்டுக்கொள்வது சகஜம் அல்லவா ? இதுவும் சமயப் பொறையின் சார்பாக இருக்கிறதல்லவா ?

மேலும், சமயப் பற்றில் வைணவர்கள் பிடிவாதம் படைத்தவர்கள் என்று மக்கள் நினைப்பது உண்டு. ஏனெனில் எந்த வைணவனும் சைவப் பெயர்களை இட்டுக் கொள்வது அரிது. ஆனால் தற்காலத்தில் வைணவ நாயுடுக்களும் வைணவப் பிள்ளைமார்களும், சுப்பிரமணியன், நடராசன் பழனியப்பன் என்ற சைவப் பெயர்களை இட்டுக் கொள்வது சகஜமாகிவிட்டது.

இனி, கோயில்களில் உள்ள சிறு அறைகளும், சிற்பங்களும் ஆராயத் தகுந்தவைகள். ஆழ்வார் திருநகரி, ஸ்ரீ வைகுண்டம், திருக்குறுங்குடி, முதலிய வைணவக் கோயில்களில் நடராசர், முருகபிரான், பிள்ளையார் முதலிய திருவுருவங்கள் ஆங்காங்கு இருப்பதைக் காணலாம். மற்றும்

வைணவக் கோயில்களில் சிவாலயங்கள் இருப்பதும், வைணவ மடங்களின் பார்வையில் சிவன் கோயில்கள் பரிபாலிக்கப்படுவதும் நெல்லை வட்டத்தில் சாதாரணமாகக் காணலாம். இந்த சான்றுகள் சமயப் பொறையினைக் காட்டவில்லையா ?

சோழர், பாண்டியர், பல்லவர் வாலாறுகளில் சமயப் பொறையினை நிரூபிக்கின்ற கணக்கற்ற சான்றுகள் இருக்கின்றன. இவைகளையெல்லாம் ஆராயும்போது பூசல்களைக் காட்டிலும் பொறையே மிகுதியாக இருக்கக் காண்போம். பூசல்களை நிரூபிக்கும் சான்றுகள் புராணங்களிலும் கவிதைகளிலுமே உண்டு. வரலாற்றுப் பகுதிகளிலோ, கல்வெட்டுக்களிலோ மிகக்குறைவு, ஆகவே,

'மிகை நாடி மிக்க கொளல்'

என்ற வள்ளுவர் வாக்கைக்கொண்டு ஆராயின், நமது நாட்டில் பூசலைக் காட்டிலும் பொறையே மிகுதியாக உண்டு என்று கொண்டால் அதுவே சரியென்று ஏற்றுக் கொள்ளலாம் அல்லவா ?

---

# திருமூலர் எண்ணாயிரம்

டாக்டர்–பு. வே. தேவராஜ முதலியார்

சைவ உலகிலே பத்தாவது திருமுறையாகத் தொன்று தொட்டு வைத்து எண்ணப்பட்டுள்ள நூல் திருமூலர் திருமந்திரம் மூவாயிரம் என்பது. அந்த நூலிலே நமக்கு அளவிலாப் பற்று ஏற்படும்படி ஆண்டுக்கு ஒரு முறையாக ஒவ்வொரு மந்திரமாக மூவாயிரமும் திருமூலரால் நமக்குத் தரப்பெற்றது என்று தெய்வச் சேக்கிழார் பெருமான் விதந்து அருளினர்கள். ஆயினும் அம் மூவாயிரத்திலே அகச் சான்ருக, திருமந்திரம் 74-ம் செய்யுள் கூறும்.

செப்பும் சிவகாமம் என்னும் அப்பேர்பெற்று
அப்படி நல்கும் அருணந்தி தாள்பெற்றுத்
தப்பிலா மன்றில் தனிக்கூத்துக் கண்டபின்
ஒப்பில் எழுகோடியுகம் இருந்தேனே (74)

திருமந்திரம் மூன்றும் தந்திரம் இருபதாம் பகுப்பு அமுரிதாரணை தலைப்பில் 6 பாடல்கள் இருக்கின்றன. 2-ஆம் தந்திரத்து, கற்பக்கிரியை தலைப்பில் 41-பாடல்கள் இருக்கின்றன. இப்பாடல்கள் எப்படி இந்நூலில் இடம் பெற்றுள்ளன என்பதை கூர்ந்து கவனிக்கவேண்டும். மேலும் பல இடங்களில் பாடல்கள் அந்தாதித் தொடர்பு இல்லாமலே இருக்கிறது. திருமூலர் வைத்தியக் கருக்கிடை 600. திருமூலர் வைத்தியம் 1000. திருமூலர் ஞானம் 84. திருமூலர் ஞானேபதேசம் 30. நடுவணை ஞானம் 30. ஞானக் குறி 30. சோடச ஞானம் 16. ஞானம் 11. இப்படி பல நூல்கள் அச்சில் வந்திருக்கின்றன.

சித்தர் நூல்களிலே, அகத்தியர் அருளிய தேற்றமானது பண்டைய நூல் பரிபாஷைத் திரட்டு. அது பல சித்தர் நூல்களின் ஆராய்ச்சித் தொகுப்பு. அது ஐந்து காண்ட முடையது. அதில் இரண்டாம் காண்டத்தில் 37-வது பாட்டில், 'எண்ணுயிரம் திரட்டித் திருமந்திரத்தை யிருநூருய்த் திருமூலர் பாடி வைத்தார்,' என்ற வாக்கியம் திருமூலர் திருமந்திரம் எண்ணுயிரம் என்பதை காட்டுகிறது.

பொதுவாக எல்லாச் சித்தர் நூல்களிலும் வாதம், வைத்தியம், யோகம், ஞானம், வேதாந்த சித்தாந்தம், ஐம்பூத விளக்கம், தத்துவ விசாரணை, பூசை நெறி, உபாசனை மற்றும் பல கலை ஞானங்களையும், விரவியும் நிரவியும் பாடியிருப்பது மரபு. அத் திருமூலர் எண்ணுபிரத்தினின்று இத் திருமந்திரம் மூவாயிரம் பிரித்தெடுத்து தொகுப்பப் பெற்றது என்பது, இத்திரு மந்திரத்தைப் படிக்கத் தொட்ட நாற்பது ஆண்டுகளாகவே அடியேனுடைய எண்ணம். இம்மூவாயிரம் தனித்த சித்தாந்த சாஸ்திரத் தொகுப்பாய் இல்லாமல் வேறு பல சமயக் கொள்கைகளும் அதில் இருக்கின்றன. சிறப்பாகத் திருமூலர் சித்தராகையால் சித்தர் சம்பிரதாயக் கொள்கைகள் பல இதில் நிரம்பியிருக்கின்றன.

திருமூலர் மூவாயிரத்தில் குருமட வரலாறு வருமாறு.

கலந்தருள் காலாங்கர் தம்பால கோரர்
நலந்தரு மாளிகைத் தேவர்நா தாந்தர்
புலங்கொள் பரமானந் தர்போக தேவர்
நிலந்திகழ் மூலர் நிராமயத் தோரே.

மேற்கண்ட பாட்டில் ஏழு சித்தர்கள் பெயர் நன்ருகக் குறிக்கப்பட்டிருக்கின்றன. இந்த சித்தர்கள் பெயராலே பல சித்தர் நூல்கள் இருக்கின்றன. முக்கியமாக நமக்குக் கிடைக்கும் சித்த நூல்கள் போகர் ஏழாயிரம், போகர் கற்பவிதி, போகர் நிகண்டு, போகர் சரக்குவைப்பு, முதலியன. இவருடைய சீடரே புலிப்பாணி முனிவர். அவரும் எண்ணிறந்த நூல்கள் செய்துள்ளார். தன்னுடைய நூல்களில் தன் குரு போகர் பெயரைப் போற்றியுள்ளார். மேற்படி பாட்டிலுள்ள காலாங்கர், காலாக்னி ருத்ரர் என்று பிறழ்ந்து பொருள்கொண்டு சிலர் எழுதியுள்ளனர். இவர் காலாங்கி நாயனர் என்று சொல்லப்படும் சித்தர்தான். காலாங்கி நாயனருடைய நூல்கள் பல உள்ளன. தீக்ஷா விதி, பட்சணி, சூத்திரம், பலதிரட்டு, ரகசியம், பூஜாவிதி, தண்டகம், வாத ஞான சூத்திரம் முதலியன. இவற்றிலும் மேற்கண்ட நாயனர் தன் குரு தேவராகிய திருமூல நாயனரைப் பற்றிப் புகழ்ந்திருக்கிருர். புலிப்பாணி முனிவர் ஓரிடத்தில் தன் நூல் தொகையைக் குறிப்பிடும்போது,

பாரப்பா போகருட கடாட்சந் தாலே
பண்பாக விளங்கத் தானுஞ்
சீரப்பா கொக்கோகத் திரட்டொன் றப்பா
திறமுடனே நூற்றைம் பதுவுஞ் சொன்னேங்,
கூறப்பா வாடை பதினுறிற் சொன்னேங்
குருவான ஞானமொடு தொண்ணூற்ருறு,
வீரப்பா சோசியமுந் நூற்றுக்குள்ளே விளம்பினேம்
நேத்திரம்போல் தோணும் பாரே.

தன் குரு போகருடைய பெயரை, மேற்படி பாடலில் குறிப்பிடுவது போற்றத்தக்கது.

காலாங்கிநாதர் பூஜாவிதி என்பதில் காப்புப் பாடலில்,

ஆதியிலே அமைத்தவிதி யெழுத்தி னாலே
அருள்பெருகும் திருமூலர் பாதம் போற்றி
நீதியுடன் பூசைவிதி தன்னை மைந்தா
நேர்மையுடன் கைமுறையாய்ப் பாடு தற்குப்

போதமெனும் ஞானபூ ரணமே காப்பு
பூரணமாய் நின்ற மனோன்மணியே காப்பு
சோதியெனுங் கருணைவிழி மலர்க்கண் ஞான
சுந்தரமாய் நின்றகண பதிகாப் பாமே.

தன் குரு திருமூலலரைக் குறித்தது குறிப்பாக நோக்கத் தக்கது.

சமீபத்திலிருந்த வடலூர் இராமலிங்க ஸ்வாமிகள் :

" சாஸ்திரங்களில் சிறந்தது திருமூலர் தந்திரம். இது மொத்தம் 8000 பாடல்கள் அடங்கியது. தோத்திரங்களில் சிறந்தது திருவாசகம்" என்று வசனக் குறிப்பில் குறிப்பிட்டிருக்கிறார்கள். கொங்கணர் நூலிலும், போகர் நூலிலும் மச்ச முனிவரும், அகத்தியரும் மூலர் எண்ணாயிரம் பாரு என்று திருமூலர் பாடல் தொகை எண்ணாயிரம் என்றே பரம்பரையாகக் கூறியுள்ளார்கள். இந்த எண்ணாயிரம் திருமந்திரம் அச்சுக்கு வரவில்லை. ஆனாலும் ஏட்டுச் சுவடியில் இருப்பதாகப் பலர் கூறினார்களேயன்றி ஒருவரேனும் கண்ணுக்குக் காட்டவில்லை.

திருமூலர் கருக்கிடையின் முகவுரையில் இதனைப் பதித்த ஷண்முகாநந்த ஸ்வாமிகள் கீழ்க்கண்ட இரண்டு பாடல்கள் எண்ணாயிரத்திலிருந்து குறிக்கப்பட்டிருப்பது கவனிக்கத் தக்கது.

மன்மூலிகை வகை வல்லுப்புத் தீநீர்
பன்றூதடற் பொருட் பாடாணம் லோகம்
இன்னியற் சத்து ரசமணி யோகம்
ஒன்றற் கொன்றுயர் விலக்காம் நோய்க்கே.

மருப்பதுடல் நோய் மருந்தெனல் சாலும்
மருப்பதுள நோய் மருந்தென லாகும்
மருப்பதினி நோய் வாரா திருப்ப
மருப்பது சாவை மருந்தென லாமே.

தஞ்சை சரபோஜி மகால் புத்தகசாலை எண்சுவடியில் மூலர் எண்ணாயிரத்தில் ஒரு பகுதி என்று இருக்கிறது.

ஆதலால் இக்கட்டுரையைக் கூர்ந்து நோக்கும் அன்பர்கள திருமூலர் எண்ணாயிரம் திருமந்திரம் என்ற பெரு நூல் ஒன்று உண்டு என்றும், அதனின்று திரட்டியதே திருமந்திரம் மூவாயிரம் என்றும் மனதிற் கொண்டு எண்

ணுயிரத்தின் எட்டுச்சுவடியை எட்டியமட்டும் தேடிப் பார்ப்பார்கள் என்றும், அதற்குத் திருமூலரின் இன்னருளையே நாடுகின்றேன்.

---

# நாளந்தா பல்கலைக் கழகமும் காஞ்சியும்

**கோவை கிழார்**

**ப**ண்டைய பாரதத்தில் தோன்றிய கல்வி நிலையங்களில் மிகப் புகழ்பெற்றது நாளந்தா மகாவிகாரம் என்ற பல்கலைக் கழகம் ஆகும்.

ஓரளவு படித்த மாணுக்கர்கள் தாம் ஏற்கனவே படித்த படிப்பினைப் பின்னும் பெருக்கி அறிவின் முதிர்ச்சி பெறுவதற்காகப் பல தொலை நாடுகளிலிருந்தும் பாரதம் வந்து பல ஆண்டுகள் படித்துத் தேறிய நிலையம்தான் நாளந்தா மகாவிகாரம் என்பது. அந்நிலையத்திற்குப் படிக்க வந்தவர்கள் கொரியா, மங்கோலியா, ஜப்பான், சீனு, துகாரா, திபேத்து, இலங்கை முதலிய தொலைவு நாடுகளிலிருந்து வந்தார்கள் என்று யுவான்சங்கு, இத்சிங்கு முதலிய யாத்திரிகர்கள் கூறிப் போந்திருக்கிறுர்கள். அவர்களில் யுவான் சங்கு என்ற சீன யாத்திரி கி. பி. 635 முதல் ஆறு ஆண்டுகளும் இத்சிங்கு என்றவர் 675 முதல் 10 ஆண்டுகளும் நாளாந்தாவிலேயே தங்கி இருந்து படித்தார்கள். அவ்விரு பெரியார்களும் எழுதி வைத்திருக்கும் விவரங்களிலிருந்தே அந்தப் பல்கலைக் கழகத்துச் செய்திகளை அறியலாம்.

இந்த மிகப் பெரிய கல்விக் கழகத்தில் 8500 மாணவர்கள் படித்தார்கள். அவர்களுக்கு 1510 ஆசிரியர்கள் கற்பித்தார்கள். நாள்தோறும் 100 உபன்னியாசங்கள் நிகழ்த்தப் பட்டன. வெவ்வேறு தலைப்புக்களில் வெவ்வேறு வகுப்புக்களில் பாடங்கள் கற்பிக்கப்பட்டன. பல்கலைக் கழகத்திற்குள் புகவேண்டின் ஒரு தேர்தலில் வெற்றிபெற வேண்டும். அது மிகவும் கடினமானது. 100-க்கு 20 பேரே அதில் தேர்ந்து முன்னேறுவார்கள்.

அக்கழகத்தில் ஒரு ஆசிரியர் ஆறு மாணுக்கர்கள் வீதம் கற்றுக்கொடுப்பார். பெரிய வகுப்புக்கள் என்பதே கிடை

யாது. ஆகவே ஒவ்வொரு மாணாக்கனுடைய தனித்தேர்ச்சியும் உறுதி செய்யப்பட்டது. இந்த முறையில் அந்தப் பல்கலைக் கழகத்தின் கல்வித் திட்டம் வெற்றிபெற்று விளங்கியது.

கற்பிக்கப்பட்ட பாடங்கள் மிக விரிவானவை. வட மொழி பாலிமொழி இவ்விரண்டிலும் இருந்த ஆரிய பௌத்த நூல்கள் எல்லாம் கற்பிக்கப்பட்டன. சமயம், உலகீயம் இந்த இரண்டு நிலைகளும் கொள்ளப்பட்டன. சிறப்பாக, விஞ்ஞானம், வரலாறு, நற்கலைகள், தொழில் முறைகள், இலக்கண தர்க்கம், தத்துவ ஆராய்ச்சி, சாங்கியம், யோகம், நியாயம், மருத்துவம், சிகிச்சை, வித்யை முதலியவைகள் எல்லாம் போதிக்கப்பட்டன. அவைகளில் மருத்துவம் கட்டாய பாடமாக இருந்தது.

யுவான் சுவாங்கு என்ற சீனத் துறவியார் கல்வியின் பொருட்டு இந்தியாவிற்குச் சீன நாட்டிலிருந்து வந்த பயணத்தில் பட்ட கடுமைகளை நினைத்தால் நெஞ்சு திடுக்கிடும். பாலைவனங்கள், பனி நீங்கா மலைகள், பகைவர் நாடுகள் இவைகள் எல்லாம் வெகு துணிவோடு கடந்து பாரத நாடு புகுந்து நாளந்தாவில் சீல பத்திரர் என்ற ஞானசாரியரிடம் யோக சாத்திரம் கற்றுக்கொண்டார்.

அக்காலத்தில் அப் பல்கலைக் கழகத்தில் மிகப் புகழ் பெற்ற அறிஞர்கள் கற்பித்து வந்தார்கள். பலவேறு காலங்களில் நாகார்ச்சுனர், ஆரியதேவர், ஆசங்கர், வாசுபந்து, தின்னாகர் முதலிய உயர்ந்த ஞானிகள் கல்வி கற்பிப்பதில் ஈடுபட்டிருந்தார்கள்.

நாளந்தா பல்கலைக் கழகமானது வெளிநாடுகளிலிருந்து சிறந்த அறிஞர்களை வசீகரித்ததை ஒட்டி அப்பல்கலைக் கழகமானது பாரத நாட்டுக் கருத்தோவியங்களை வெளிநாடுகளுக்குப் பரப்பும் எண்ணத்துடன் பல அறிஞர்களை அனுப்பியது. அவ்விதம் சென்ற அறிஞர்கள் சிறப்பாகச் சீனை திபேத்து என்ற நாடுகளுக்குச் சென்று அங்கே சமய நூல்களைப் புகுத்தினதுமன்றி வடமொழியிலிருந்து அந்நூல்களைச் சீனமொழி திபேத்து மொழிகளில் இயற்றினர்கள்.

இவ்வாறு பாரத தேசத்திலிருந்து சீனவிற்குச் சென்று சமயப் பிரசாரமும் கல்விப் பிரசாரமும் செய்தவர்களில் சிறந்தவர்கள் குமார ஜீவர், பரமார்த்தர் முதலியோர்கள். திபேத்தில் வசித்தவர்களில் சாந்தரக்ஷிதர், பத்ம சம்பவர்,

கமல சீலர், ஸ்திரமதி, புத்த கீர்த்தி என்ற நாளந்தா அறிஞர்கள்.

நாளந்தா மகா விகாரமும் அதனைச் சார்ந்த மற்ற கல்லூரிக்கான விகாரங்களும் தங்களுக்கு உரித்தான முத்திரைச் சின்னங்களை வைத்திருந்தார்கள். அவர்களுடைய முத்திரைகள் அடியிற்கண்ட சொற்களைக் கொண்டிருந்தன. ஸ்ரீ–நாளந்த–மகாவிகார–ஆர்யபிக்ஷு – சங்கஸ்ய – அதானு "நாளந்தா மகாவிகாரத்தின் அதிகாரிகளுடைய" என்பது பொருள். மற்றக் கல்லூரி அல்லது விகாரங்களின் முத்திரைகள் சங்கம் அல்லது குணகாரம் என்று கூறப்படும். (ஸ்ரீ நாளந்தா மகாவிகார, குணகார புத்த பிக்ஷுணும்).

நாளந்தாவில் வெளிநாட்டு மாணவர்களுக்கும் தனிக் கல்லூரிகள் இருந்தன. சுவர்ண தீபத்தின் (சாவகம், சுமத்ரா) மன்னன் சைலேந்திர அரசன் பாலபுத்திர தேவன் நாளந்தாவில் ஒரு கல்லூரி அமைத்து அதற்கு வேண்டிய நிலங்களைத் தானம் செய்திருந்தான். மேலும் 815—854 கி. பி. ஆண்ட மகத அரசன் தேவபாலதேவன் மூலமாக மகதநாட்டுக் கிராமங்கள் ஐந்தையும் அக்கல்லூரியின் மேற்செலவுகளுக்காக ஏற்படுத்தி வைத்தான். சாவக நாட்டு (ஜாவா) மாணவர்களுக்குத் தேவைப்பட்ட உணவு (பிண்டபத), உடை (சீவரம்), இருப்பிடம் (சத்ர), படுக்கை, மருந்து (பேஷஜ்யதி), எழுதுகோல் (லேகநாடி) முதலியவைகள் கொடுக்கப்பட்டன. இந்த நன்கொடையானது மகத மன்னனுக்குத் தூதுவன் பாலவர்மனால் தெரிவிக்கப்பட்டது என்று அம்மன்னனின் செப்பேடு ஒன்று கூறுகின்றது.

நாளந்தா நகரத்தில் இந்த மகா விகாரத்தைத் தவிர, வேறு மகா விகாரங்கள் இருந்தனவாகச் சில முத்திரைகள் தெரிவிக்கின்றன. இந்த முறையில் அந்நகரம் ஒரு பெரும் கல்வி நிலையமாக அக்காலத்தில் விளங்கி யிருந்தது என அறியலாம். இம்மகா விகாரங்கள் வெவ்வேறு மன்னர்களால் தோற்றுவிக்கப்பட்டன. சக்கிராதித்தன், ஹரிவர்மன், சிம்ஹபாலன், தர்மபாலன் முதலிய அரசர்கள் அவ்வாறு கல்விக் கழகங்களைத் தோற்றுவித்திருக்கிறார்கள்.

மன்னர்கள் நன்கொடையாக அளித்த கிராமங்களிலிருந்து கிடைக்கும் வருவாய்களிலிருந்தே இந்த நாளந்தா கழகங்கள் நடத்தப்பட்டன. ஸ்ரீ ஹர்ஷ சக்கரவர்த்தி

இந்தப் பல்கலைக் கழகத்திற்கு 100 கிராமங்களை நன்கொடையாகத் தந்தான். இப் பல்கலைக் கழகம் விவசாயப் பண்ணைகளையும் பால் பண்ணைகளையும் நடத்திவந்தன. அவைகளே இக் கழக மக்களுக்கு உணவுப்பொருள்களைத் தந்தன.

இந்த விவரங்களை யுவான் சுவாங்கு விவரமாக எழுதியிருக்கிறார். கழகக் கிராமங்களிலிருந்து வண்டிகளில் நூற்றுக்கணக்கில் பேகுல் அளவு அரிசியும் நூற்றுக்கணக்கான கோட்டியளவு வெண்ணெயும் பாலும் கொண்டுவரப்பட்டதாம். ஒரு பேகுல் என்பது 133 ராத்தல் அல்லது $66\frac{1}{2}$ சேர் அல்லது $1\frac{1}{2}$ மணங்குக்குச் சமமாம். ஒரு கோட்டி என்பது 150 ராத்தல் அல்லது 75 சேர் அல்லது 2 மணங்குக்குச் சமமாம். இந்த வகையில் வந்த பொருள்கள் 400 மணங்கு என்று கொண்டால் அது 16000 மக்களுக்குப் போதும் எனலாம். அதாவது ஒரு ஆளுக்கு ஒரு நாளுக்கு ஒரு சேர் அரிசி வேண்டியிருக்கும் என்க. அரிசிமட்டும் அல்ல. நல்ல உடல் உறுதிபெறப் பாலும் நெய்யும் தரப்பட்டதாம். பல்கலைக் கழகத்தின் உயிர்நாடி அதன் நூலகமே. அது 'தர்ம கஞ்சம்' என்ற பகுதியில் வைக்கப்பட்டிருந்தது. அந்தக் கட்டிடம் மூன்று பிரிவுகளாகக் கட்டப்பட்டிருந்தது. அவற்றின் பெயர்கள் ரத்னசாகரம், ரத்னோததி, ரத்ன ரஞ்சகம் என்பவை. அவைகளில் இந்த சாரதையை 9 நிலைகள் (மாடிகள்) உயரம் கொண்டதாம்.

மேலேகூறிய விவரங்கள் வடநாட்டில் 14ம் நூற்றாண்டுகளுக்கு முன் இருந்த கல்வி நிலையைப் பற்றியதாகும். இந்த விவரங்கள் சீன யாத்திரிகர்களால் நமக்குக் கிடைத்தன. நமது மக்கள் இவ்விவரங்களை ஏன் எழுதி வைக்கவில்லையோ அறியோம். ஆனால் அக்காலத்து அறிஞர்கள் ஆராய்ந்து எழுதி வைத்த நூல்கள் கிடைத்திருக்கின்றன.

இந்த விவரங்களைப்போலத் தமிழ் நாட்டில் இருந்த கழகங்களைப்பற்றி நமக்கு அறிவுறுத்துவார் இல்லை. அதே யுவான் சுவாங்கு என்ற சீன யாத்திரிகனே தென்னாட்டிற்கும் வந்துள்ளான். இங்கே காஞ்சியில் இருந்த கல்வி நிலையைப் பற்றிக் கூறியுள்ளான். பல்லவர் காலத்தில் கல்வி எவ்வாறு இருந்தது என்பதற்கு அவன் நூலே சான்று ஆகும். தமிழிலோ அதைப்பற்றி ஒன்றும் இல்லை. காஞ்சி, மல்லைப் பதிகளில் உள்ள கற்சிற்பங்களே அக்காலத்துக்

கல்வித் திட்டத்தைப் போதிக்கின்றன. நூல்களை ஏன் எழுதினார் இல்லையோ அறியோம். சமயப் பகைமையே இந்த வறிய நிலைக்குக் காரணமாக இருக்கமுடியுமா?

சீன யாத்திரிகர் யுவான் சுவாங்கு நாளந்தாவில் படித்ததுமட்டுமன்றிப் பாரதநாட்டைச் சுற்றிப் பார்த்துவிட்டுத் தான் கண்டவைகளையெல்லாம் நன்கு எழுதி வைத்திருக்கிறான். முதலில் நடு பாரதத்தில் சிறப்புற்றிருந்த ஸ்ரீ ஹர்ஷனுடைய பேரரசைப் பார்த்துவிட்டுப் பிறகு மேற்கில் இருந்த சாளுக்கிய புலிகேசின் II பேரரசையும் பார்த்துவிட்டுத் தெற்கே வந்தான். பல்லவர்களின் தலைநகர் காஞ்சியைக் கண்டு மிக மகிழ்ந்து அதன் சிறப்புக்களை எழுதிவைத்திருக்கிறான். அவன் வந்தபோது நாட்டை ஆண்டு வந்த பேரரசன் பெயர்பெற்ற மகேந்திரவர்மனின் புதல்வனான நரசிம்மவர்மன். யுவான் சுவாங்கு காஞ்சி சேர்ந்த ஆண்டு கி. பி. 642 ஆகும். இந்த நாட்டைத் திராவிடம் என்று அவன் குறிப்பிட்டுள்ளான். காஞ்சியைப் பற்றி அடியிற் கண்டபடி எழுதியுள்ளான்.

"நிலம் செழிப்பானது; நல்ல விளைவு தருவது; நாடு வெப்பமானது; மக்கள் அஞ்சாநெஞ்சினர்; உண்மைக்கு உறைவிடம் ஆனவர்; கற்றவர்களையும் உயர்ந்த கொள்கைகளையும் மதிப்பவர். நாட்டில் 100 சங்கிராமங்கள் அல்லது பௌத்த மடங்கள் இருக்கின்றன. பதினாயிரம் பௌத்தத் துறவிகள் இருக்கின்றனர். சைவவைணவ, சமணக்கோயில்கள் 80 இருக்கின்றன. திகம்பர சமணர் பலர் திராவிட நாட்டில் இருக்கின்றனர். புத்தர் காஞ்சிக்கு வந்து பலரையும் பௌத்தராக்கியதாக இந் நாட்டில் கூறப்படுகிறது. அசோகன் திராவிட நாட்டில் பல தூபிகளை அமைத்தான். அவற்றுள் சில காஞ்சியைச் சுற்றிலும் பழுதுற்ற நிலையில் இருக்கின்றன.

நாலந்தாப் பல்கலைக் கழகத்தில் பேராசிரியராக இருந்த தர்மபாலர் காஞ்சிப்பகுதியினர் என்றுஇங்கு கூறுகிறார்கள்.

நான் பாண்டிய நாட்டையும் பார்த்தேன். அங்கே சிலரே உண்மைப் பௌத்தர்கள். மக்கள் பொருள் ஈட்டுவதிலேயே கருத்தா யிருக்கிறார்கள். பாண்டி நாட்டில் பௌத்தம் அழிநிலையில் இருக்கிறது. பல இடங்களில் பௌத்த மடங்கள் இருந்த அறிகுறிகள் தென்படுகின்றன.

காஞ்சி ஆறு கல் சுற்றளவு உடையது. அது கடற்கரை நோக்கி இருபது கல் விரிந்துள்ள நகரம். இந்தக் கரையி லிருந்து கப்பல்கள் இலங்கைக்குப் போகின்றன.''

இந்த வகையில் சீன யாத்திரிகன் விட்டுப்போன குறிப்புக்களிலிருந்தே தமிழ் நாட்டின் விவரங்களை அறி வோம். நாலந்தாவிற்கும் காஞ்சிக்கும் கல்வித் தொடர்பு இருந்ததென அறிகிறோம். தருமபாலர் (அறவண அடிகள்) காஞ்சியைச் சேர்ந்தவர் நாளந்தாப் பல்கலைக் கழகத்தில் சிறந்த பேராசிரியராக இருந்தார் என்றால் அந்நாளிலும் தமிழ் மக்கள் கல்வியில் மிகச் சிறந்தவர்கள் என அறிய லாம். தமிழ் மக்கள், சமயப் பற்று, பண்பாடு, போர்த் திறம், வாணிப மேம்பாடு முதலிய சிறந்த பண்புகளைச் சீன யாத்திரிகன் மெச்சியிருப்பதை நன்கு அறியலாம்.

---

## சைவ சித்தாந்தச் சொற்பொழிவுகள்

**திருப்பனந்தாள் மடத்தின் திட்டத்தின்கீழ்த் திருவாசகமணியின் பேச்சுக்கள் :** திருப்பனந்தாள் காசி மடத்தின் தலைவராகிய ஸ்ரீமத் அருள்நந்தித் தம்பிரான் சுவாமிகள் ஏற்படுத்தியுள்ள சித்தாந்தப் பிரசாரத் திட்டத்தின்படி காசிச் சர்வகலாசாலை யிலும் அலகாபாத் சர்வகலாசாலையிலும் ஆண்டுக்கொரு புலவர் சென்று ஆங்கிலத்தில் சைவ சித்தாந்தத்தைப் பற்றி மொத்தம் நான்கு சொற்பொழிவுகள் செய்துவருவது மரபு. வித்வான்களைத் தேர்ந்தெடுக்கும் ஸ்தாபனம் அண்ணாமலைச் சர்வகலாசாலையின் சிண்டிகேட் ஆகும்.

1957-வது ஆண்டின் பேச்சாளராகத் தேர்ந்தெடுக்கப் பெற்றுள்ளவர் திருவாசகமணி கே. எம். பாலசுப்பிரமணி யம் பி.ஏ., பி.எல். ஆவர். இவர் செப்டம்பர் மாதம் 6-ந் தேதி யன்று அலகாபாத் சர்வகலாசாலையிலும், 10, 11, 12 தேதி களில் காசி இந்து சர்வகலாசாலையிலும் முறையே ஆங்கிலத் தில் நான்கு சித்தாந்தச் சொற்பொழிவாற்றி வந்துள்ளார். சம்ஸ்கிருத இலாகாத் தலைவர் ஸ்ரீ சடோபாத்யாயர், அலகா பாத் சொற்பொழிவிற்குத் தலைமை வகித்தவர் திருவாசக மணியின் அழகிய ஆங்கிலப் பேச்சைப் பாராட்டியதோடு தமது சர்வகலாசாலையிலும் இனி மூன்று சொற்பொழிவு கள் நிகழ்த்த ஏற்பாடு செய்யுமாறு திருப்பனந்தாள் மடாதி பதியைக் கேட்டுக்கொண்டார். கூட்டத்திற்கு நூற்றுக்கு மேற்பட்ட மாணவ மாணவிகள் வந்திருந்தனர்.

காசி இந்து சர்வகலாசாலைக் கூட்டங்கள் மூன்றுக்கும் முறையே தலைமை வகித்தவர்கள் காசி தத்துவ சாஸ்திரப் பகுதியின் தலைவர் திரு. பி. எல். ஆத்ரேயா, முன்னாள் தத்துவ சாஸ்திரப் பகுதித் தலைவர் ஆர். கே. மைத்ரா, சர்வகலாசாலை உபஅத்யக்ஷகர் திரு. ஜா. அவர்கள். இவர்கள் மூவரும், கூட்டத்திற்கு நாள்தோறும் 151, 200, 250 என்று பெருகியவண்ணம் வந்து நின்றுகொண்டு கேட்ட மாணவ மாணவிகள் அனைவரும், திருவாசகமணியின் இணையற்ற ஆங்கிலச் சொற்பெருக்கை மிகமிகப் பாராட்டி மகிழ்ந்தனர். தமது எழுத்துப் பிரதியைப் படிக்காமல், சித்தாந்தத்தைப்பற்றிய முக்கியமான கொள்கைகளைத் திருவாசகமணி வாரி வாரி வீசினர். தமக்கே உரிய அற்புதமான ஆங்கில வாக்கியங்கள்மூலம், இடையிடையே இரட்டுறமொழிதல், நகைச்சுவை, நாடகபாணி, தமிழ்ப் பாட்டுகள் இவற்றையும் சந்தர்ப்பத்துக்கேற்ப நுழைத்துப் பேசிய திருவாசகமணியவர்கள் வந்தவர்கள் பேச்சு முடியும்வரை தம்மை மறந்து கேட்டு மகிழச் செய்துவிட்டார். இதன் விளைவாக அவ்விரண்டு சர்வகலாசாலை மாணவர்களிடையேயும் சித்தாந்தத்தில் என்றும் காணாததோர் ஆர்வம் ஏற்பட்டுள்ளது என்பது எல்லோரும் கண்டதோர் விசேஷம். எல்லாவற்றையும் விட இவரது பேச்சுக்களுக்கு மெருகு தீட்டியதோர் அம்ஸமாவது இவர் ஆங்காங்கே வேதம், உபநிஷத் முதலியவற்றினின்றும் மேற்கோள்களை எடுத்துக்காட்டிச் சென்றமையாகும்.

அலகாபாத்தில் இவர் பேச்சின் தலைப்பு : “ சித்தாந்தத்தில் கடவுள்.” காசியில் பேசிய மூன்று பேச்சுக்களின் தலைப்பு : “ சித்தாந்தத்தில் ஆன்மா ” என்பவையாகும்.

திருப்பனந்தாள் மடத்தின் திட்டப்படி காசிச் சர்வகலாசாலையில் சித்தாந்தப் பேராசிரியராகப் பணிபுரிந்து வரும் திரு. கே. சிவராமன் வந்தனோபசாரம் கூறினர்.

திருப்பனந்தாள் மடத்தின் காசி மடக் காரியஸ்தர் திரு. கலியாணசுந்தரம் பிள்ளையும், ஓய்வுபெற்ற டிபுடி கலெக்டர் சைவத்திரு. அரங்கசாமி முதலியார் தம்பதிகளும், ஓய்வுபெற்ற போலீஸ் இன்ஸ்பெக்டர் பிரம்மஸ்ரீ கிருஷ்ணய்யர் அவர்களும் இக் காசிக் கூட்டங்களுக்கு வந்திருந்தது குறிப்பிடத்தக்கது.

# திருநந்திதேவர் *

உலகத்திற் பல ஜீவன்கள் இருந்தபோதிலும் மனிதனை மட்டும் உயர்வாகக் கருதுவானேன்? மனிதனிடத்து ஓர் உயரிய குணம் இருக்கிறது. அதுவே தன்னைப்பற்றி ஆராயும் குணம். இவ்வித அறிவே உயர்ந்ததாகும். இதுவே ஆன்மாவைத் தூய்மைப்படுத்தவல்லது. மற்றவையெல்லாம் ஒரு சமயம் இருந்து மறு சமயம் மறைவன. அவை சிற்சில இடங்களுக்கோ சிற்சில சமயங்களுக்கு மட்டுமோ பயன் படுவன.

பின்னர் உடம்புக்கும் உயிருக்குமுள்ள சம்பந்தம் என்ன? உடல் வேறு; உயிர் வேறு. இந்நிலையை அறியக் கூடிய அறிவு இன்னும் நமக்கு வரவில்லை. தற்போதைய நம்முடைய அறிவு ஐந்தாகப் பிரிந்து நிற்கிறது. ஒன்று பலவாகப் பிரியும்போது பலம் குறைவது இயற்கை. பள்ளத்தின் வழி நீர் ஓடுவதுபோல ஐம்புலன்களின் வழி ஓடும் அறிவு கண்ணின் வழியே வெகுதூரம் செல்கிறது. மற்றவை நம்மிடமே உள்ளன. அவை சிறிது தூரத்தில் உள்ளவைகளையே அறியும் தகுதியுடையன.

கண்ணால் பார்க்கப்படுவதே உலகம். ஆங்கிலத்தில் பார்ப்பதற்கு லுக் (Look) என்று சொல்கிறோம். பார்ப்பது லோகம். இது லுக் என்பதன் தாதுவினடியாகப் பிறந்தது. இவ்வுலகத்துப் பொருள்கள் ஒவ்வொன்றுக்கும் ஒவ்வொரு காரணம் உண்டு. உலகத்தை நன்றாகப் பார்ப்பவனே தன்னைப் பார்க்கிறான். இல்லாதவன் தன்னைப் பார்ப்பது இல்லை. எதிரில் உள்ளதைமட்டும் அறிவது அறிவன்று. இவ்வித அறிவை யுடையவன் மனிதனாகக் கருதப்படமாட்டான். சாதாரண உலகில் பெரியோர் வைத்துவிட்டுப்போன

---

*இது, ஸ்ரீலஸ்ரீ ஞானியார் சுவாமிகள் திருமயிலை வெள்ளீச் சாத்தில் 25—4—37-ல் நிகழ்த்திய சொற்பொழிவின் குறிப்பு. திரு. மே. த. கிருஷ்ணசாமி முதலியாரவர்களால் எழுதப்பட்டது. சித்தாந்தம் மலர் 10, இதழ் 5-ல் வெளியிடப்பட்டது.

